19th August 1960]

*Certain facilities to Backward Classes*

*293 Q.—SRI P. G. MANICKAM : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) பின்தங்கிய வகுப்பினர்களும், தகுதியுள்ள சமுதாயங்களும் முடிதிருத்த நிலயங்களையும் (சலூன்கள்), சலவைச் சாலைகளையும் (லாண்டரீஸ்), தையற்கடைகளையும் நிறுவுவதற்காக எந்த மாவட்டத்தை ஹரிஜன நல இலாகா தேர்ந்தெடுத்திருக்கிறது ?

(ஆ) மேற்கண்ட ஒவ்வொரு தொழிலுக்கும் எத்தனை பேர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள் ?

(இ) ஒவ்வொருவருக்கும் எவ்வளவு தொகை உதவியாகக் கொடுக்கப்படும் ?

THE HON. SRI P. KAKKAN : (அ) Salem district.

(ஆ) The loan will be given to fifty persons in each trade every year.

(இ) For saloons—Rs. 250 each.
For laundries—Rs. 150 each.
For tailoring shops—Rs. 400 each.

SRI P. G. MANICKAM : இவ்வாறு கடனாகக் கொடுக்கப்படும் தொகை எவ்வளவு காலத்திற்குள் செலுத்தப்படவேண்டும்? எவ்வளவு தவணைகளாகச் செலுத்த வேண்டும் என்று சர்க்கார் ஏற்பாடு செய்திருக்கிறது ?

THE HON. SRI P. KAKKAN : ஹரிஜன நல இலாகா டைரக்டர் அல்லது கலெக்டர் பார்த்து எத்தனை தவணைகளில் கட்டவேண்டுமென்று தீர்மானிக்கிறார்கள். கூடுமான வரையில் 10 இன்ஸ்டால்மெண்டில் கட்டுவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

SRI V. SUBBIAH : இந்த மாதிரி உதவி கிராமப் புறத்தில் உள்ள சலவைத் தொழிலாளர்களுக்கும் கொடுக்கப்படுகிறதா? இல்லையென்றால் இனிமேலாவது கொடுக்க ஏற்பாடு செய்வார்களா?

THE HON. SRI P. KAKKAN : கிராமத்தில் இருக்கக் கூடிய சலவைத் தொழிலாளர்கள், மற்றவர்கள், எல்லோருக்கும்தான் கொடுக்கப்படுகிறது.

SRI M. K. SOMASUNDARAM: பெரிய பெரிய பட்டிணங்களில் வைத்திருக்கக் கூடிய மாதிரி கிராமத்தில் இருக்கக் கூடிய சலவைத் தொழிலாளர்கள் லாண்டரி மாதிரி வைக்காமல், வீடுகளில் வைத்துக்கொண்டு, வீடுகளிலிருந்து துணிகளை எடுத்து வந்து சலவை செய்வதால், அவர்களுக்கும் "அயர்ன் பாக்ஸ்" முதலியவைகளை விநியோகம் செய்ய சர்க்கார் முன் வருமா ?

[19th August 1960

THE HON. SRI P. KAKKAN : இப்போது அந்த உத்தேசம் இல்லை. இருந்தாலும் கனம் அங்கத்தினர் தனியாகக் கேள்வி போட்டால் அதைப் பற்றியும் பரிசிலனை செய்யலாம்.

SRI T. T. DANIEL : May I know, Sir, to whom the application for the loan should be sent?

THE HON. SRI P. KAKKAN : To the Collector, Sir.

SRI A. GOVINDASAMY: முதலில் சேலம் மாவட்டத்தை எடுத்துக்கொண்டாலும், இதர மாவட்டங்களுக்கு விஸ்தரிப்பது எப்போது எடுத்துக்கொள்ளப்படும்?

THE HON. SRI P. KAKKAN : இந்த ஜில்லாவிலே ஏற்படுகின்ற வெற்றியைப் பொறுத்து இதர ஜில்லாக்களுக்கு விஸ்தரிக்கப்படும்.

*Co-operative Training College*

* 294 Q.—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(a) whether there is any proposal to start a Co-operative Training College; and

(b) if so, when and where?

THE HON. SRI R. VENKATARAMAN : (a) Yes, Sir.

(b) It is proposed to locate the Co-operative Training College at Madras. It is too early now to say when the College will be started.

SRI A. A. RASHEED : Sir, may I know whether the college will be under the control of the University and whether Diplomas or Degrees will be awarded after training?

THE HON. SRI R. VENKATARAMAN : It would be under the control of the Department.

SRI A. VEDARATHNAM : இப்போது கூட்டுறவுப் பயிற்சிக்கு என்னென்ன ஸ்தாபனங்கள் இருக்கின்றன? ஏதேனும் வேறு கல்லூரிகள் எங்காவது இருக்கின்றனவா? அப்படியானால் எங்கு?

THE HON. SRI R. VENKATARAMAN : சாதாரண ஸீனியர், ஜூனியர் இன்ஸ்பெக்டர்கள் பயிற்சிக்கு நம்முடைய ராஜ்யத்தில் நான்கு கூட்டுறவுப் பயிற்சி ஸ்தாபனங்கள் இருக்கின்றன. ஆனால் உயர்தரப் பயிற்சிக்கு பூனாவில் ஒரு பயிற்சிக் கல்லூரி இருக்கிறது. அதையே நாமும் உபயோகப்படுத்திக் கொள்ளலாம் என்று ரிஸர்வ் பாங்க் ஸ்தாபனத்தார் சொன்னார்கள். ஆனால் நமது ராஜ்ய சர்க்கார் நமக்குத் தனியாக வேண்டுமென்று முடிவு செய்திருக்கிறது.

SRI K. VINAYAKAM : Sir, May I know if the officials belonging to the Department are going to be trained in this college or is it open to the raw people coming out of the schools and colleges?